# ஆதிசங்கரர் அமிர்தம்

சுவாமி ஸ்ரீ மகேந்தரா

*முகவரி:*
ஸ்ரீ ஆதி சங்கரர் திருமடம்
அம்பாங்
மலேசியா

# அணிந்துரை

ஆதிசங்கரர் இந்தியா முழுவதும் கால்பதித்து அத்வைத கொள்கையைப் பரப்பினார். இந்து மதத்தின் ஆறு பிரிவுகளான ஷண்மதத்தை நிலைநாட்டியவர் ஆவார்.

மலேசிய நாட்டில் ஆதிசங்கரர் திருமடத்தை நிறுவி கட்டிக் காத்து வருபவர் சுவாமி ஸ்ரீ மகேந்தரா ஆவார். எல்லோரையும் கவர்ந்து இழுக்கக் கூடிய நல்ல திருமுகம் கொண்டவர். தன்னுடைய வாக்கு சாதுர்யத்தால் எல்லோர் மனதிலும் இடம்பிடித்திப்பவர் சுவாமி ஸ்ரீ மகேந்தரா ஆவார்.

ஆதிசங்கரர் மீது அளவுகடந்த பக்தி கொண்டு மலேசிய நாட்டில் பக்தியை பரப்பி வருபவர். மதம், இனம், மொழி கடந்து நல்லதை மட்டுமே எல்லோருக்கும் சொல்லுகிற நல்ல பண்புக்கு சொந்தக்காரர்.

சிறுவர்களுக்கும், சிறுமிகளுக்கும் ஆண்டுதோறும் இந்து மதத்தின் கலைக் கலாச்சாரத்தை பரப்புவதற்காக வகுப்புகள் நடத்தி புனித சேவையை மிகுந்த சிரத்தையுடன் செய்து வருபவர்.

நாடு முழுவதும் தன்னுடைய பக்திச் சொற்பொழிவை செய்து வரும் இவர் எல்லோருக்கும் ஊக்கம் கொடுக்கக் கூடிய அளவில் சொற்பொழிவு ஆற்றி வருகிறார். இவருடைய இப்டைப்பானது ஆன்மிக உலகில் குறிப்பாக ஆதிசங்கரரை வழிபட்டு வருபவர்களுக்கு ஒரு கையேடாக விளங்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

வணக்கங்களுடன்<br>
கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியன்<br>
**ஆசிரியர் – கலைமகள்**<br>
*ஆலோசகர்* - தேஜஸ் பவுண்டேஷன்<br>
சென்னை – 600004

# ஆதிசங்கரர் ஏற்படுத்திய 5 பீடங்கள்

பல இடங்களுக்குச் சென்று வேதக் கருத்துக்களைப் போதித்த சங்கரர் வேத பாடசாலை அமைக்கும் பொருட்டு ஒரு நல்ல இடத்தைத் தேடி வந்தார். இன்றைய கர்நாடக மாநிலத்தில் துங்கா நதி பாயும் புண்ணிய பூமிக்கு வந்தார். அந்த இடத்திற்கு சிருங்கேரி என்று பெயர்.

சிருங்கேரி என்ற பெயர் எப்படி வந்தது?

முன்னாளில் ருஸ்ய சிருங்கர் என்ற மாமுனிவர் இந்த இடத்தில் தவம் இயற்றி வந்தார். ருஸ்ய சிருங்கர் எங்கு செல்கிறாரோ அங்கு நல்ல மழை பொழியும். மழையின்றி வறண்டு போன தேசங்களில் எல்லாம் ருஸ்ய சிருங்கரை வரவேற்று வணங்குவார்கள். அவர் பாதம் பட்டதால் அந்த இடத்தில் நன்றாக மழை பெய்து அந்நிலம் செழிப்பாகும் என்பது புராணம் கூறும் செய்தி.

இந்த ருஸ்ய சிருங்கர் திரேதாயுகத்தில் தசரதன் குழந்தைப் பேறு வேண்டிச் செய்த புத்திரகாமேஷ்டி யாகத்தை முன்னின்று நடத்தினார். அதன் பிறகே தசரதனுக்கு ராமன், பரதன், லட்சுமணன், சத்ருகன் என்ற நான்கு புதல்வர்கள் பிறந்தார்கள். அதன் பிறகே ராமாயணம் நடந்தேறியது. அத்தகைய சக்தி படைத்த ருஸ்ய சிருங்கர் தவமியற்றிய இடத்தில் நம் சங்கரரின் பாதம் பட்டதும் இன்னும் பெருமை கொண்டது.

அங்கு ஒருநாள் சங்கரர் தியானத்தில் அமர்ந்திருந்தார். அவருடன் சேர்ந்து அவர் சென்ற இடங்களுக்கெல்லாம் தாங்களும் சென்று வேதக் கருத்தைப் பரப்பி வந்தார்களே... சுரேசரும், பாரதியும்... அவர்கள் அருகிலுள்ள இடங்களுக்குச் சென்று வந்தார்கள். அப்போது பாரதிதேவி ஒரு காட்சியைக் கண்டார். ஒரு திடலில் நன்றாக வெயில் காய்ந்து கொண்டிருந்தது. அப்போது ஒரு தவளையானது வெயிலின் வெப்பம் தாங்காது நாக்கை வெளியே நீட்டித் தவித்தது. அப்போது அங்கு வந்த ஒரு நாகப் பாம்பு தவளையின் துன்பத்தைப் பொறுக்கமாமல் படமெடுத்தது வெயிலிலிருந்து தவளையைக் காக்கும் பொருட்டுக் குடை பிடித்தது.

இந்தக் காட்சியைப் பார்த்த சங்கரர் அந்த மண்ணின் பெருமையை அறிந்து கொண்டார். தனக்கு உணவாகக் கூடிய தவளைக்குகூட குடை பிடிக்கும் பாம்பு வாழும் இந்த மண் அமைதி நிறைந்தது. எதிரியைக் கூட நேசிக்கும் மனநிலை கொண்ட ஜீவன்கள் வாழும் இந்தப் புண்ணிய பூமியே நாம் நம் வேதபாடசாலையை நிறுவத் தகுந்த இடம் என்று நினைத்தார். தன் விருப்பத்தைச் சுரேசரிடம் கூற அவரும் சம்மதித்தார்.

துங்கபத்ரா நதியின் கரையில் ஸ்ரீ சக்கரத்தை பிதிஷ்டை செய்தார் சங்கரர் பின், அந்த மடத்தின் பீடாதிபதியாக நியமித்தார். இனி இம்மடத்தின் பீடாதிபதியாக வருபவருக்கெல்லாம் பாரதி என்ற பட்டம் பொருந்தும் என்று ஆசீர்வதித்தார்.

சந்திரமவுலீசுவர லிங்கத்தையும் ரத்தினம் பதித்த ஒரு படிக விநாயகரையும் சுரேசாசாரியாருக்கு அளித்து தினமும் பூஜை செய்யும்படிக் கூறினார் சங்கரர்.

சுரேசாசாரியாரும் பாரதிதேவியும் சங்கரரின் நூல்களைச் செவ்வனே கற்றனர். மண்டனராக இருந்து சுரேசராக மாறினார் இவர். இவர் பிரம்மாவின் அம்சம் என்பதால் சுரேசாசாரியார் என்ற பெயரில் விளங்குவாய் என்று அருளினார் சங்கரர்.

சங்கரர் முதலில் வேத மடத்தை நிறுவியது சிருங்கேரியில். அதன் பிறகு மூன்று தலைமை மடங்களை நிறுவினார். ஆக நம் பாரத தேசத்தில் திசைக்கொரு மடமாக நான்கு தலைமை மடங்களாக நிறுவி தன் பிரதமச் சீடர்களை அவைகளின் தலைமைப் பீடாதிபதிகளாக நியமித்தார்.

இவை நான்கு வேதங்கள் கூறும் அத்வைத கருத்துகளின் அடிப்படையில் நிறுவப்பட்ட மடங்களாகும்.

1. முதலில் தட்சிணத்தில் (தெற்கில்) துங்கா நதிக்கரையில் சிருங்கேரியில் நிறுவப்பட்ட மடம். இது யசுர்வேதம் சொல்லும் 'அகம் பிரம்மாஸ்மி' என்ற அத்வைத தத்துவத்தை உணர்த்துகிறது. இதன் தலைமை பீடாதிபதி சுரேசாசாரியார். இம் மடத்தின் தலைமை பீடாதிபதியாய் பொறுப்பேற்பவர்களுக்கு பாரதி, தீர்த்தர், பூரி, கிரி, ஆசிரமர், ஆரண்யர் ஆகிய பட்டங்கள் வழங்கப்படும்.

2. அடுத்து கிழக்கில் ஒரிசாவிலுள்ள பூரியில் ஜகந்நாதம் கோவர்த்தன மடம் நிறுவப்பட்டது. ரிக் வேதம் சொல்லும் 'பிரஜ்ஞானம் பிரம்மம்' என்கிற அத்வைத தத்துவத்தை விளக்குகிறது. இம் மடத்தின் தலைமை பீடாதிபதியாக தன் சீடர் ஹஸ்தாமலகரை நியமித்தார். இம் மடத்தின் பீடாதிபதிகளாகப் பொறுப்பேற்பவர்களுக்கு வனர், ஆரண்யர், மகாமந்திரர் ஆகிய பட்டங்கள் வழங்கப்படும்.

3. அடுத்து மேற்கில் துவாரகா நகரில் அமைக்கப்பட்ட காளிகா மடம். இது சாமவேதம் சொல்கிற 'தத்வமசி' என்ற தத்துவத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. இதன் தலைமைப் பீடாதிபதியாகத் தனது பிரதமச் சீடரான பத்மபாதரை நியமித்தார். இதன் பீடாதிபதியாக பொறுப்பேற்பவர்களுக்கு தீர்த்தர், ஆஸ்ரமர் ஆகிய பட்டங்கள் வழங்கப்படும்.

4. அடுத்து வடக்கில் ஜோதிர் மேடம் நிறுவப்பட்டது. இது கயிலாயத்தில் அமைந்துள்ளது. இது அதர்வணம் வேதம் சொல்லும் 'அயமாத்மா பிரம்மம்' என்கிற அத்வைத தத்துவத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. இதன் தலைமைப் பீடாதிபதியாக

தோடகாச்சாரியாரை நியமித்தார் சங்கரர். இம் மடத்தின் தலைமை பீடாதிபதியாகப் பொறுப்பேற்பவர்களுக்கு கிரி, பர்வதர், சாகரர் என்ற பட்டங்கள் வழங்கப்படும்.

இவ்வாறு நான்கு திசைக்கொரு மண்டலங்களாகப் பிரித்து அவற்றிற்கொரு தலைமை மடங்களை அமைத்து அத்வைதத்தைப் பரப்பினார். கூடவே தன்னுடைய ஒவ்வொரு சீடருக்கும் தன்னுடைய பாஷ்யங்களின் தெளிவான விளக்கவுரையை எழுதும்படிக் கூறினார்.

சங்கரரின் நூல்களுக்குத் தெளிவுரை எழுதினார். சுரேசாசாரியார். அது போல் சங்கரர் பாஷ்யம் செய்த அனைத்து உபநிடதங்களையும் கறறு அதில் தைத்திரியம், பிருகதாரண்யகம் ஆகிய உபநிடதங்களுக்கு விரிவான விளக்கம் எழுதினார்.

அதே போல் சங்கரரின் பிரதம சீடராய் பத்மபாதர் சங்கரரின் பிரம்ம சூத்திர பாஷ்யத்திற்கு விரிவான விளக்கம் எழுதினார்.

இப்படி சிருங்கேரியில் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கியிருந்த சங்கரர் வேதங்களைத் தன் சீடர்களைக் கொண்டு எளிமையாக்கி மக்களைச் சேரும்படிச் செய்தார்.

## காஞ்சி சங்கர மடம்

**5.** தமிழ்நாட்டின் காஞ்சிபுரத்தில் அமைந்துள்ள ஓர் இந்து சமய துறவியர் இருப்பிடமாகும். இது காஞ்சி காமகோடி பீடம் என்று அழைக்கப்படுவதுண்டு. ஆதிசங்கரர் இங்கு சமாதியடைந்ததாகவும் இந்த மடத்தை நிறுவியதாகவும் கூறப்படுகிறது. இந்த மடத்தின் தலைவர்கள், பீடாதிபதியாக. மற்ற நான்கு (சிருங்கேரி சாரதா மடம், துவாரகை மடம், கோவர்தன மடம், ஜோஷி மடம்) சங்கர மடத் தலைவர்களைப் போலவே, ‘‘சங்கராச்சாரியர்’’ என்றப பட்டத்துடன் விளங்குகின்றனர்.

காஞ்சி மடம், கும்பகோணத்தில் இருந்த 18ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் புகழ்பெறத் துவங்கியது. சிலர் இதனை சிருங்கேரி சங்கர மடத்தின் கிளையாகக் கருதுகின்றனர். இன்று

தென்னிந்தியாவில் உள்ள முதன்மையான இந்து சமய அமைப்புகளில் ஒன்றாக இந்த மடம் விளங்குகிறது.

காஞ்சி மடத்தின் கூற்றின்படி 18ஆம் நூற்றாண்டில் இடம் பெயர்ந்ததற்கான காரணம் ஹைதர் அலியின் படையெடுப்பு ஆகும். மேலும் அவர்கள் ஆதிசங்கரர் வந்தமைக்கும் மடம் 2500 ஆண்டுகள் பழைமையான வரலாறு கொண்டிருப்பதற்கும் காஞ்சியை சுற்றியுள்ள கோயில்களில் கல்வெட்டுகள் தொல்வியல் சான்றுகளாக உள்ளதாக கூறுகின்றனர்.

# ஸ்ரீ சக்கரத்தில் சாரதாதேவி

ஸ்ரீசங்கரர் தன் சிஷ்யர்களுடன் திக்விஜயம் செய்து வந்தபோது துங்கா நதியின் கரையிலுள்ள ''சிருங்கேரி''யை அடைந்தார். இங்குள்ள ஆசிரமங்களில் வேத சாஸ்திங்களைப் பயின்று பல வேள்விகள் செவ்வனே செய்து வரும் சான்றோர்கள் வசித்து வந்தார்கள்.

முன் காலத்தில் விபாண்டக மகரிஷி சிருங்கேரியின் மத்தியில் சிறிய குன்றில் லிங்கத்தை பூஜித்து அங்கு ஐக்கியமானார். அவர் புதல்வர் ருச்யசிருங்கரும் ''சிங்கேரியில் வாசம் செய் பின்னால் சிருங்கேரிக்கு சமீபத்திலுள்ள ''ஹிக்கா'' என்ற ஸ்தலத்திலுள்ள லிங்கத்தை பூஜித்து அதில் ஐக்கியமானார். மிருகக் கூட்டங்களும் பறவையினங்களும் தன் பகைமையை மறந்து ஒன்று கூடி வாழ்கின்ற இடம். அது தவிர இந்த இடம் கருதி ஸ்ரீசங்கரர் இங்கு தனது ஆசிரமத்தை நிறுவினார். அங்குள்ள ஓர் குன்றின் பாறையில் எல்லா மந்திரங்களுக்குள் உறைவிடமாய் ஸ்ரீவித்யையின் ஸ்தூல ரூபமான சக்கரராஜ்யத்தை வரைந்து பிரம்ம வித்யா ஸ்வரூபிணியான ஸ்ரீசாரதா தேவியைப் பிரதிஷ்டை செய்தார்.

அப்போது கலைவாணி ''இந்த சாரதா பீடத்தில் அமர்பவர் எவராயினும் அவர் நானே ஆவர்'' என்று அருளினர். அத்யாத்ம

வித்யை, மஹா வித்யை, பிரம்ம வித்யை ஸ்ரீ வித்யை என்று பலவாறு போற்றப்படும் வித்யா ரூபிணி ஸ்ரீ சாரதாம்பாள். சரஸ்வதிதேவியே இங்கு சாரதாதேவியாக அருள்பாலிக்கிறார். ஆதிசங்கரர் ஸ்ரீ சக்கரத்தில் சாரதாதேவியை பிரதிஷ்டை செய்திருப்பதால் இவளே பிரம்மா, விஷ்ணு, சிவன் துர்க்கை, லட்சுமி, சரஸ்வதியாகத் திகழ்கிறார்.

ஸ்ரீசங்கரர் இந்த ஆசிரமத்திலேயே, பரமசிவனிடமிருந்து குரு பரம்பரையாக தமக்குக் கிடைத்த சந்திர மௌலீசுவரர் என்ற ஸ்படிக லிங்கத்தையும் – நடுவில் மாணிக்கத்தைக் கொண்ட ஸ்படிகத்தினாலான ரத்ன கர்ப்ப கணபதி மூர்த்தியையும் பூஜித்து வந்து பின்னால் தமது சிஷ்யரான ஸ்ரீ சுரேஸ்வராச்சார்யாரிடம் கொடுத்தருளினார். இந்த மூர்த்திகளைத்தான் இப்போதைய ஆசாராயாள் தினமும் பூஜை செய்வதைப் பார்க்கலாம்.

ஸ்ரீசங்கரர் ஏற்படுத்திய பீடங்களில் இதுவே முதலானது – தென்நாட்டில் நிறுவப்பட்டதால் தட்சிணாம்னாயம் என்ற பெயர் ஆம்னாயம் என்ற பெயர் ஆம்னாயம் என்ற சொல் வேதத்தைக் குறிக்கும். பரம்பரையா வழங்க வரும் உபதேசம் என்ற பொருளும் உண்டு. இதனால் இந்த பீடத்திற்கு ''வியாக்யான பீடம்'' என்ற பெயரும் ஏற்பட்டது.

# ஆதிசங்கரரும் திருப்பதியும்

ஆதிசங்கரரை ஒரு காபாலிகரிடம் இருந்து காப்பாற்றினார் நரசிம்மர். அவர் உடனே சிங்கவேள் குன்றம் (அகோபிலம்) சென்று நரசிம்மனை வழிபட்டார்.

அப்போது ''திருமலை செல்'' மோட்சத்துக்கு என்னவழி? என்பதைச் சூசகமாக காட்டி நிற்கிறான்! அங்கு சென்றால்தான் உமக்கு விளங்கும்!'' என்று உத்தரவானது! உடனே திருப்பதி யாத்திரையை மேற்கொண்டார் ஆதிசங்கரர்.

அவர் திருமலை வந்து எம்பெருமானைக் கண்ணாரக் கண்டு களித்தார். வைத்த கண்ணை எடுக்க முடியவில்லை! பிஞ்சிற் பழுத்த துறவியான அவரே பெருமாளின் பேரழகில் மனம் தடுமாறினார்! உடனே விஷ்ணு பாதாதி கேச ஸ்தோத்திரம் என்ற துதியை இறைவன் மேல் பாடத் தொடங்கிவிட்டார்.

எவ்வங்கமும் விடாமலிருக்குமாறு சங்கரர் ஆதிசேஷன் மீது சயனித்திருப்பவரும், கருடனை வாகனமாக உடையவருமான வைகுண்டநாதனே திருப்பதியில் குடி கொண்டிருப்பதால், இபலோக வைகுண்டநானின் ஒவ்வொரு அங்கத்தின் அமையும் பாதத்திலிருந்து கேசம் வரை வர்ணிக்கிறார். இதுவே ''விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரம்'' என்று கூறப்படுகிறது.

இத்துதியில் முதல் பத்து சுலோகங்களில் விஷ்ணு பகவான் யுத்தத்தில் பயன்படுத்தும் பஞ்ச ஆயுதங்களை துதிக்கிறார்.

1. ஓம் என்ற நாதத்தை உணர்த்துகிறது. 'பாஞ்சஜன்யம்' என்று சங்கு

2. எஞ்ஞானமும் சுழன்று கொண்டே இருக்கும். கால சக்கரத்தை காட்டுகிற'சுதர்சனம்' என்ற சக்கரம்.

3. பெருமான் 'சார்ங்கம்' என்ற வில்.

4. மது என்ற அரக்கனைக்கொன்று தேவர்களுக்கு ஆனந்தம் அளித்தது 'நந்தகம்' என்ற வாள்.

5. தாமரை போன்ற கால்களில் தசம் கொண்டிருக்கும் 'கௌபோதகி' என்ற அவருடைய கதை. தங்க நிறம் உள்ளவாகனமான கருடனையும், படுக்கையாக அமைந்திருக்கும் அனந்தனையும் ஸ்ரீதேவி இவர்கள் யாவரையும் வணங்குகிறார்.

பரந்தாமன் பாத தூளிகளைக்கண்டு அவற்றைத் தம் சிரசில் தரிக்க தேவர்கள் துடிக்கின்றனர். இப் பாத தூளிகள் நம் பாவக்குவியல்களை அழிக்கும் வல்லமையுடையன என்கிறார்.

பின்னர் ஸ்ரீனிவாசனின் பாதங்களில் மீன், சக்ரம் போன்ற ரேகைகளின் சோபையையும் புகழ்ந்து, ஒரு அடியால் விண்ணையும் மற்றதால் மண்ணையும் மூன்றாவது அடியால் பலிச் சக்ரவர்த்தியை பாதாளத்திற்கும் இந்திரனை சுவர்க்கத்திற்கும் அனுப்பிய அப்பாதங்களை வணங்குகிறார். விஷ்ணுவின் பாதம் பிரம்மலோகத்தை அடைந்த போது பிரம்மன் தன் கமண்டல நீரால் அத்திருப்பாதங்களை நீராட்டிய அந்த அபிஷேக நீரே புனித கங்கையாக மாறி மண்ணுலகிற்கு ஓடி வரப்பிரசாதமாக அமைந்ததை நினைவுபடுத்துகிறார்.

உலகெங்கும் வியாபித்துள்ள விஷ்ணுவிற்கு ஆயிரம் பாதங்கள் உண்டு. அத்திருப்பாதங்கள் என்னைக் காக்கட்டும் என சங்கரர் துதிக்கிறார், பரதனால் பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்ட பாதுகையின் மகிமையை ஐந்து சுலோகங்களில் புகழ்கிறார். பின்னர் கால் விரல்களையும் பளிங்கு போன்ற நகங்களையும் புகழ்கிறார். இந்திராதி தேவர்கள் விஷ்ணுவின் பாதங்களில் விழுந்து வணங்கும்போது, நிர்மூலமான பளிங்கு போன்ற நகங்களில் தங்கள் உருவங்கள் பிரதிபலிக்க, தமக்கும் மேற்பட்ட தேவர்கள் இங்குள்ளனரே என திகைக்கின்றனர் என்றும், அவ்வாறே நவரத்னங்கள் பதிந்த மகுடத்தோடு இவர்கள் அவர் பாதங்களில் நமஸ்கரிக்கும்போது விஷ்ணுவின் பாதங்களோ நவரத்தினம் நிறைந்ததாக உள்ளன என மோகம் அடைந்தனர் என்றும் சங்கரர் சித்தரித்துக் கூறுகிறார். பின்னர் எம்பெருமான் வயிற்றைச் சுற்றி கட்டப்பட்ட பட்டுத் துணியையும் ஒட்டியாணத்தின் அழகையும், அவர் தொப்புளின் எழிலையும், அண்டங்கள் அடங்கிய மணிவயிற்றையும், ஸ்ரீவத்ஸம் என்ற அழகிய மச்சத்தையும் மார்பை உறைவிடமாகக் கொண்ட மகாலட்சுமியையும், அவள் அணிந்துள்ள மாலைகளையும் வைஜயந்தியையும் போற்றி வணங்கினார்.

பாதம் முதலாக, உச்சி வரை, ஒவ்வொரு அங்கமாக வர்ணித்து வர்ணித்து விஷ்ணுவின் நமாம்யகஹம் என்று போற்றி மகிழ்ந்தார்.

இப்படி மோட்ச ரகசியம் காட்டிக் கொடுப்பவனை, ஊருக்கே காட்டிக் கொடுத்த ஆதி சங்கரர் முடிவு செய்தார். மக்கள் மலையேறி வந்து அல்லவா சேவிக்க வேண்டும்!

ஏறுவதற்கே மூணு மணி நேரம் மேலே ஆகுது! குளிர் வேற அப்பப்போ நடுங்குது! மிகவும் கடுமையான யாத்திரையாக இருக்கே! மக்கள் வராது போனால்? பெரும் புதையலை அல்லவா இழப்பார்கள்?

ஜனாகர்ஷணம் (ஜன + ஆகர்ஷணம் = மக்கள் ஈர்ப்பு)

தனாகர்ஷணம் (தன + ஆகர்ஷணம் = செல்வ ஈர்ப்பு)

என்ற இரண்டு மந்திர யந்திரகளை ஆதி சங்கரர் செய்வித்தார். தாமே யோகத்தில் இருந்து பெருமாளின் திருவடிகளில் அந்த சக்கரங்களை ஸ்தாபிக்கச் செய்துவிட்டார். ஏற்கனவே ஏழுமலையானின் பத்மபீடத்தின் அடியில், மனோ காரகனான சந்திரன் வேறு நிலை கொண்டுள்ளான்!

இன்னிக்கும் ஜோதிட பரிகாரங்களில், சந்திர தோஷ நிவர்த்தித் தலமாகத் திருப்பதி சொல்லப்படுகிறது! இப்போது இந்த ஜனாகர்ஷண யந்திரம் வேறு! சொல்லணுமா?

இதுதான் திருமலைச் செல்வச் செழிப்புக்குக் காரணம் என்று பலரும் சொல்வார்கள்! சங்கரருக்குப் பின் வந்த அனந்தாழ்வான் இராமானுசர் காலத்தில் கூட அவ்வளவு செழிப்பு இல்லை! பூமாலைக்கே வழியின்றி இருந்தான் திருமலையான்!

சங்கரர் ஸ்தாபித்த யந்திரபலம் பிரசித்தமாகத் தெரியத் தொடங்கியதும், கொஞ்சம் கொஞ்சமாய், திருமலையே மக்கள் மலையாக மாறிவிட்டது!

# ராமேசுவரத்தில் ஆதி சங்கரர்

ராமேஸ்வரம் ராமநாதசுவாமி திருக்கோயில், இந்துமத கோயில்களில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. இறைவனே இறைவனை வழிபட்ட பெருமை கொண்ட கோயில் ஆகும் இத்தலம் பாண்டிய நாட்டில் அமைந்துள்ள தேவாரப் பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் ஒன்றாகும்.

ராமேஸ்வரம் ராமாயணகால வரலாற்றையுடைய கோயிலாக இருந்தாலும், இந்த கோயிலின் தற்போதைய வடிவமைப்பு 12ம் நூற்றாண்டில் பாண்டியர்களால் கட்டப்பட்டது என நம்பப்படுகிறது. இத் திருக் கோயிலின் புராணம் மற்றும் கட்டிட வரலாறு என இரண்டுமே சிறப்பானது.

ராமேஸ்வரம் கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. சுமார் 15 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள ஒரு மிகப் பெரிய கோயிலாகும். 865 அடி நீளமும் 657 அடி அகலமும் உடைய இராமேஸ்வரம் கோயிலின் கிழக்கு கோபுரமே மிகவும் உயரமானது. இதன் உயரம் சுமார் 126 அடி. மேற்கில் உள்ள கோபுரம் சுமார் 78 அடி உயரம் உடையது.

இக் கோயிலின் நான்கு பக்கமும் வாயில்கள் அமைந்திருந்தாலும் வடக்கு, தெற்கு வாயில்கள் உபயோகத்தில் இல்லை. ஆலயத்தினுள் இராமலிங்கம், காசி விஸ்வநாதர் பர்வதவர்த்தினி, விசாலாட்சி, நடராஜர் ஆகிய இவருக்கும் தனித்தனியே விமானங்கள் அமைந்திருக்கின்றன. சுவாமியின் சந்நிதி கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இச்சந்நிதியில்

சீதாதேவியால் உருவாக்கப்பட்டு இராமபிரானால் பிரதிஷ்டை செய்யப்பட்ட இராமலிங்கர் சிவலிங்கத் திருமேனியுடன் காட்சி அளிக்கிறார். இந்த லிங்கத் திருமேனியுடன் அனுமனின் வால் தழும்பு இன்றும் காணலாம்.

சுவாமி சந்நிதிக்கு இடதுபுறம் காசி விஸ்வநாதர் சந்நிதி அமைந்துள்ளது. இதுவே அனுமன் கொண்டு வந்த பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவ லிங்கமாகும். மூலவர் கருவறையின் முன் மண்டபத்தில் ராமர், சீதை லட்சுமணன் ஆகியோர் திரு உருவங்கள் காணலாம். இவர்களுக்கு எதிரே தெற்கு நோக்கியபடி தனியே ஒரு ஆஞ்சநேயரும் எழுந்தருளியுள்ளார்.

அம்பிகை பர்வதவர்த்தினியின் சந்நிதியில் ராமநாதரின் வலப்பக்கம் அமைந்திருக்கிருக்கிறது. அம்பிகை கோயிலின் வட மேற்கு முலையில் பள்ளிகொண்ட பெருமாள் ஆகாயத்தை நோக்கியபடி கிடந்த திருக் கோலத்தில் உள்ளார். தென்மேற்கு முலையில் சந்தான கணபதியின் சந்நிதி அமைந்திருக்கிறது.

ஆலயத்தின் வெளிப் பிரகாரத்தில் வடகிழக்கு மூலையில் நடராஜர் சந்நிதி அமைந்துள்ளது. ராமநாத சந்நிதிக்கு பின்புறம் இரண்டாவது மற்றும் மூன்றாவது பிரகாரங்களுக்கிடையே சேதுமாதவர் சந்நிதிஅமைந்துள்ளது. தினமும் காலை 5.00 மணிக்கு ராமநாதசுவாமி சந்நிதியில், ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த ஸ்படிக லிங்கத்திற்கு அபிஷேகம் நடக்கிறது. இந்த அபிஷேகத்தை தரிசிக்க கட்டணம் உண்டு. பர்வதவர்த்தினி அம்பிகை பீடத்திற்கு கீழே ஆதிசங்கரர் ஸ்தாபித்த ஸ்ரீ சக்ரம் இருக்கிறது. சக்தி பீடங்களில் இது ''சேதுபீடம்'' ஆகும்.

இந்த ஆலயத்தின் மற்றொரு சிறப்பு 1212 தூண்களைக் கொண்ட இக் கோயிலின் மூன்றாம் பிரகாரம் ஆகும். உலகிலேயே மிக நீளமான பிரகாரம் என்ற பெருமையைப் பெற்ற இப் பிரகாரம் உலகப் பிரசித்தி பெற்றதாகும். முத்துராமலிங்க சேதுபதி அவர்களால் 1740, 1770 ஆண்டுகளில் இந்த மூன்றாம் பிரகாரம் கட்டி முடிக்கப்பட்டது.

இந்த பிரகாரம் வெளிப்புறத்தில் கிழக்கு, மேற்காக 690 அடியும், வடக்கு, தெற்காக 435 அடி நீளமும் கொண்டது. உள்புறத்தில் கிழக்கு மேற்காக 649 அடியும், வடக்கு, தெற்காக 395 அடி நீளமும் கொண்டது. இந்த பிரகாரத்தில் ராமபிரானுக்கு கடலில் பாலம் (சேது பாலம்) அமைக்க உதவி செய்ய வந்த நளன், நீலன், கவன் ஆகிய மூன்று வானரர்களின் பெயரால் லிங்க சன்னிதிகளும், பதஞ்சலி ஐக்கியமான நடராஜர் சன்னிதியும் உள்ளது. இந்த நடராஜர் ருத்திராட்ச மண்டபத்தில் அழகுடன் எழுந்தருளியுள்ளார்.

சிவபெருமான் ஜோதி ரூபமாக காட்சியளிக்கும் 12 தலங்கள் இந்தியாவில் உள்ளன. அதில் ஒன்று ராமேஸ்வரம். மற்ற 11 தலங்களும் பிற மாநிலங்களில் உள்ளன. விபீஷணன், ராமருக்கு உதவி செய்ததன் மூலம் ராவணனின் அழிவிற்கு அவனும் ஒரு காரணமாக இருந்தான். இந்தப் பாவம் நீங்க, இங்கு இலிங்கப் பிரதிஷ்டை செய்து வழிபட்டான். அவனுக்கு காட்சி தந்த சிவன், அவனது பாவத்தைப் போக்கியதோடு ஜோதி ரூபமாறி மாறி இந்த லிங்கத்தில் ஐக்கியமானார். இதுவே ''ஜோதிர் லிங்கம்'' ஆயிற்று. இந்த இலிங்கம் சுவாமி சன்னிதி பிரகாரத்தில் மேற்கு நோக்கி இருக்கிறது.

## திருச்செந்தூரும்... ஆதி சங்கரரும்....

ஆதி சங்கரருக்கும், திருச்செந்தூருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. திருப்பதிக்கு லட்டு, பழனிக்கு பஞ்சாமிர்தம்... என்ற வரிசையில் திருச்செந்தூர் முருகன் கோயிலின் சிறப்பு பிரசாதம் இலை விபூதி. பன்னீர் இலையில் விபூதியை வைத்து வழங்குவதுதான் இது. எந்தக் கோயிலிலும் இப்படி வழங்குவது இல்லை. ஆதி சங்கரர் இந்த இலை விபூதியை உண்டு காச நோயை நீக்கிக் கொண்டதாகவும் அதனாலேயே அவர் ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கம் பாடியதாகவும் கூறப்படுகிறது. இன்றும் இந்த இலை விபூதி இலை தீராத பல நோய்களைத் தீர்க்கும்

அருமருந்தாக விளங்கி வருகிறது. திருச்செந்தூர் கோயிலுக்கு வருபவர்கள் இதைத் தவறாது பெற்றுச் செல்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

அபிநவகுப்தர் என்ற சித்தர் ஒருவர் கெடுதல் செய்யும் நோக்கத்தில் ஆதி சங்கரருக்கு செய்வினை, ஏவல், பில்லி, சூனியம் செய்தார். இதனல் சூலைநோய் உள்பட பல்வேறு நோய்களுக்கு ஆதி சங்கரர் உட்பட்டார்.

மனமுடைந்த ஆதிசங்கரர் இறைவனை நாடி மனமுருக வேண்டினார். இருந்தும் அவருக்கு நோய் குணமாகவில்லை. அவர் ஒவ்வொரு கோயிலாகச் சென்று சோர்ந்து இருந்தார். அக்காலத்தில் அவர் வட கர்நாடகாவிலுள்ள கோகர்ண திருத்தலத்தில் தங்கி வழிபாடு செய்து வநதார். ஒரு நாள் இரவு இறைவன் தோன்றி, ''என் குமாரன் ஷண்முகன் குடியிருக்கும் புண்ணியத் தலமான செயந்திபுரம் எனும் திருச்செந்தூர் சென்று அவனைத் தரிசித்தால் உன் நோய் முற்றிலுமாக நீங்கப் பெறுவாய் என்று கூறினார். உறங்கி எழுந்து பார்த்த சங்கரரின் அருகில் விபூதி இருந்தது.

இதையடுத்து கோகர்ணேஸ்வரர் ஆணைப்படி, திருச்செந்தூர் வந்தடைந்தார் ஆதிசங்கரர். கடலில் நீராடி, பின் இறைவன் சன்னதியில் மனமுருகி நின்றபோது ஆதிசேஷனாகிய பாம்பு ஊர்ந்து ஊர்ந்து இறைவன் சன்னதியை அடைந்ததைக் கண்டார். அதே நேரம் அவருக்கு இறை தரிசனம் கிட்டியது.

அவன் அருளாலே, மடை திறந்த வெள்ளம் போல அவர் திருவாயிலிருந்து சுலோகங்கள் வெளிவந்தன. வடமொழியில் பாம்பை புஜங்கம் என்பர். வடமொழி இலக்கணப்படி புஜங்க விருத்தமாக அமைந்தன பாடல்கள். பாடி முடித்ததும் ஆதிசங்கரர் கையில் பன்னீர் இலை விபூதி பிரசாதம் வழங்கப்பட்டது. பிரசாதத்தை உடலில் பூசி உண்டார். சில நாட்களில் அவரைத் தொற்றி இருந்த நோய் அனைத்தும் முற்றிலும் குணமடைந்தது.

அதன் பின்னர் ஆதிசங்கரர் திருச்செந்தூர் சுப்பிரமணிய சுவாமி மீது அதிகப் பற்று கொண்டு மனமுருகி 32 பாடல்கள் கொண்ட சுப்பிரமணிய புஜங்க ஸ்லோகம் பாடினார். அந்த 32 பாடல்களும் கோயிலில் சிறப்பு, சுவாமியின் பெருமை போன்றவை குறித்து இருந்தது. அதில் 25-வது பாடலில் இலை விபூதியின் மகிமை பற்றி பெருமைப்பட பாடினார்.

அந்தப் பாடல் வருமாறு....

''அபஸ்மார குஷ்டக்ஷயார்ச ப்ரமேஹ
ஜ்வரோந்மாத குல்மாதிரோகா மஹாந் தஹ
பிசாசஸ்ச சர்வே பவத் பத்ரபூதிம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்ரவந்தே''

அதன் பொருள், சுப்பிரமண்யா! நின் இலை விபூதிகளைக் கண்டால் கால் கை வலிப்பு, காசம், கயம், குட்டம் முதலிய நோய்கள் நீங்கும். பூதம், பிசாசு, தீவினை யாவும் விட்டுவிடும்'' என்பதாகும்.

## ஷண்மத ஸ்தாபகர்

காஞ்சியில் வாழ்ந்தபோது சங்கரர் அரும்பெரும் செயல் ஒன்றை ஆற்றினார். அக்கினி, குபேரன், பிரம்மன், மன்மதன், யமன், வருணன், வாயு போன்ற தேவர்களை வழிபட்டு வந்த மதங்கள் மொத்தம் எழுபத்திரண்டு இருந்தன.

சங்கரர் அவற்றிலிருந்த வேத விரோதமான ஆசாரங்களை நீக்கினார். இந்து மதத்தின் முக்கிய கிளை மதங்களாகக் கருதப்படுபவை. ஆறாகும், அவை சைவம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம், சாக்தேயம் என்பனவாகும்.

சிவனை வழிபடுவது சைவம், விஷ்ணுவாம் திருமாலை முக்கியக் கடவுளாகக் கொண்ட சமயம் வைணவம், கணபதியை வழிபடும் மதம் காணாபத்தியமாகும். குமரக் கடவுளை

வழிபடுவோர் மாதம் கௌமாரம். சக்தியே அனைத்தும் என்று வலியுறுத்தும் சமயம் சாக்தம், சூரியனை வழிபடும் மதமோ, சௌரமாகும்.

சங்கரர் அந்த ஆறு சமயங்களையும் சீர் திருத்தினார், அவற்றை நாடெங்கும் பரப்புவதற்குத் தம்முடைய சீடர்கள் அறுவரை அனுப்பினார். இதனால் அவரை ஷண்மத ஸ்தாபகர் என்று அழைக்கின்றனர்.

# ஆதிசங்கரர் பாடிய கணேச பஞ்சரத்தினம்

தூத்துக்குடி அருகே ஏரலுக்குப் பக்கத்தில் உள்ள கிராமம் அறிமுகமங்கலம்.

சுமார் 200 வருஷத்திற்கு முன்னர் சோமார வல்லபன் (கொற்கை பாண்டியன் என்றும் கூறுகின்றனர்) என்று ஒரு ராஜா இங்கு ஆண்டு கொண்டிருந்தான். 1008 புரோகிதர்களை நர்மதா நதிக்கரையிலிருந்து வரவழைத்து, ஒரு பெரிய யாகம் ஏற்பாடு செய்தான்.

1007 புரோகிதர்கள் வந்துவிட்டார்கள். இன்னும் ஒரு புரோகிதர் வராததால் யாகத்தைத் துவங்க முடியாமல் வருந்தி நின்றான மன்னன். எடுத்த காரியத்தை விக்னமின்றி முடிக்க உதவும் விக்னேஷ்வரனை மனம் உருக வேண்டினான்.

அரசனின் ஆசை நிறைவேற அந்த ஆதிமூலப் பெருமானே 1008–வது புரோகிதராக வந்து, யாகத்தையும் அன்னதானத்தையும் இனிதே நிறைவேற்றிக் கொடுத்தார்.

வேள்வியைச் செவ்வனே முடித்துக் கொடுத்த அந்தப் புரோகிதருக்கு ஆறுமுகமங்கலம் கிராமத்தை அன்பளிப்பாகக் கொடுத்தான் அரசன். தனக்கு வெகுமதியாகக் கிடைத்த

கிராமத்திலேயே கோயில் கொள்ள விநாயகர் முடிவெடுத்தார். உடன் வந்த 1007 அந்தணர்களும் அங்கேயே தங்கி விநாயகனுக்கு கைங்கரியம் செய்யத் தீர்மானித்தனர்.

அங்கே கோயில் கொண்ட கணேசனுக்கு விநாயகர் என்ற திருநாமம் சூட்டி வழிவழியாக வழிபட்டு வருகின்றனர்.

ஜகத்குருஆதி சங்கரருக்கும், திருச்செந்தூர் சென்று சுப்பிரமணிய புஜங்கம் பாடுவதற்கு முன் ஆறுமுக மங்கலம் வந்து, ஆயிரத்தெண் விநாயகரின் முன்பு கணேச பஞ்சரத்தினத்தை அர்ப்பணித்தார். பிரதான சன்னிதியில் மூலவர் ஆயிரத் தெண் விநாயகர் ஆட்சி செலுத்துகிறார். அருகில் ஸ்ரீகாளஹஸவரனது சன்னிதி உள்ளது. பக்கவாட்டில் ஸ்ரீ நடராஜப் பெருமாள் சன்னிதி, அடுத்த சன்னிதி அம்பாளுடையது.

அன்னையின் திருநாமம் நித்திய கல்யாணி பெயருக்கேற்ப அழகும் இளமையும் கூடிய தோற்றம் மூலவருக்கு வலப்புறம் பஞ்சமுக விநாயகர் காட்சியளிக்கிறார். கம்பீரமான ஐந்து திருமுக மண்டலங்களும், பத்துக் கரங்களில் பல்வேறு முத்திரைகளும், ஆயுதங்களும், கொண்டு எழுந்தருளியுள்ள இந்த நர்த்தன விநாயகர் சுமார் மூன்றடி உயரமானவர்.

நான்கு கால நித்ய ஆராதனைகளுடன் விநாயக சதுர்த்தி, சிவராத்திரி, நவராத்திரி, சித்திரை பிரம்மோற்சவம் போன்றவை இங்கு விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றன.

# செல்வம் தரும் கனகதாரா ஸ்தோத்திரம்

ஒரு நாள் துவாதசி தினம். இரவு முழுக்க கண் விழித்து ஏகாதசி விரதம் இருந்து வேத சாஸ்திரங்களை உச்சரித்தபடி ஒவ்வொரு வீதியிலும் ஒவ்வொரு வீடு டாகச் சென்று 'பவதி பிட்சாம்' என்று கூறியபடி பிச்சையெடுத்தார் சங்கரன்.

ஒரு எளிய வீட்டின் முன்னால் போய் நின்றார். சங்கரனின் குரலைக் கேட்ட அந்த வீட்டுப் பெண் பிச்சையிட தன் வீட்டிலிருந்த பானைகளை எல்லாம் திறந்து பார்த்தாள். உணவு இல்லை. அரிசியும் இல்லை.

பிச்சை கேட்டு வந்திருக்கும் அந்தச் சிவப்புதல்வனுக்கு என் கையால் பிச்சையிட இயலாத அளவிற்கு நான் ஏழையாகிப் போனேனே என்று மனதிற்குள் புழுங்கினாள். தேடிப் பார்த்ததில் ஒரே ஒரு நெல்லி வற்றல் இருந்தது. அந்த நெல்லி வற்றலோடு வாசலுக்கு வந்தாள்.

சங்கரனின் முகத்தைப் பார்க்கப் பெறாமல் அவர் வைத்திருந்த பாத்திரத்தில் அந்த நெல்லி வற்றலை இட்டாள். பசி என்று வந்திருக்கும் குழந்தைக்கும் வெறும் நெல்லி வற்றலை மட்டும் தருகிறோமே என்று அவள் கண்கள் கண்ணீர் சிந்தின. அது சங்கரன் வைத்திருந்த பாத்திரத்தில் விழுந்தது.

சங்கரன் பாத்திரத்தில் இருந்த நெல்லி வற்றலையும் அந்தத் தாயின் கண்ணீரையும் பார்த்தார். உலகே துன்பத்திற்கு ஆளானது போல உணர்ந்தார். அந்தத் தாயின் அன்பில் உருகினார். அவள் மேல் கருணை கொண்டார்.

செல்வங்களுக்கெல்லாம் நாயகியான லட்சுமி திருமகளை நினைத்தார். இனி இந்த உலகில யார் வறுமையில் வாடினாலும் இந்தப் பாடலைப் பாட அவர்களின் வறுமை ஒழிந்து செல்வம் கொழிக்கட்டும் என்று ஸ்ரீ கனகதாரா ஸ்லோகத்தைப் பாடத் தொடங்கினார்.

நெல்லி வற்றலை பிச்சையிட்ட அந்தப் பெண்மணியிடம் ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்திரத்தைப் பாடிக் காட்டினார். இந்தப் பாடலை பாடி திருமகளுக்கு ஆரத்தி செய். உன் வறுமை எல்லாம் தீரும்' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்.

அந்தப் பெண்மணி தன் கணவன் வந்ததும் நடந்தவற்றைக் கூறினாள். அவளும் அவன் கணவனும் சேர்ந்து சங்கரன் கற்றுத்

தந்த கனகதாரா ஸ்லோகத்திரத்தைப் பாடி திருமகளை வழிபட்டார் வறுமை குடியிருந்த அவர்களின் வீட்டில் தங்க மழை பொழிந்தது. அவர்கள் வறுமை தீர்ந்தது.

ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்திரம் என்கிற அந்தப் பாடலின் தமிழ் விளக்கம் இதுதான்.

மொட்டுக்கள் விரிந்து மலர்ந்தது அழகு செய்கின்ற தமால மரத்தை தேனை உண்டு வாழும் வண்டுகள் மொய்த்திருப்பதைப் போல திருமாலின் அழகுப் பொன்மேனியைச் சேர்ந்திருப்பவளே, எல்லா வகைச் செல்வங்களுக்கும் நாயகியான மங்களத்தைத் தரும் மகாலட்சுமியாகிய உன் கடைக்கண் பார்வை எளியவனான என் மேல் மங்களத்தை அளிக்கட்டுமாக.

பொன்னால் செய்யப்பட்ட குடங்களில் நிரப்பப்பட்ட தூய்மையான தேவ கங்கை நீரால் அட்டதிக்குகளைக் காக்கும் யானைகளால் அபிஷேகம் செய்யப்பட்டு அதனால் நனைந்த அழகு மேனியை உடையவளே. உலகிற்கு எல்லாம் அன்னையே. உலகத்தின் ஆசாபாசங்களை எல்லாம் ஆட்டுவிக்கும் நாயகனான திருமாலின் மனைவியுமானவளே, திருப்பாற்கடலின் புதல்வியே, மகாலட்சுமியே உன்னை வணங்குகிறேன்.

இவ்வாறு அதில் கூறப்பட்டுள்ளது.

கனகதாரா ஸ்தோத்திரம் பாடல்களைப் பாடித் துதிப்பவர்கள் அனைவரும் எல்லா நற்குணங்களும் நிறைந்தவர்களாகவும் எல்லாப் பேறுகளும் பெற்றவர்களாகவும் சான்றோர்கள் கொண்டாடும் வகையில் சிறந்து விளங்குவார்கள் என்று சங்கரர் கூறியுள்ளார். சுயநலமின்றி பிறர் நலத்தைக் காக்கும் பொருட்டு பிறரின் வறுமையை ஒழிக்கும் பொருட்டு செல்வம் வேண்டும் யாவரும் இந்த பாடல்களைப் பாடி செல்வம் வேண்டினால் நிச்சயம் அவர்களுக்கு செல்வம் வந்து சேரும்.

# ஸ்ரீ தோடகாஷ்டகம்

ஆதி சங்கரரின் மேல், ஸ்ரீ தோடக ஆச்சார்யாள் எனும் சீடர் ''தோடக'' விருத்தத்தில் 6 பாடல்கள், (அஷ்டகம்) அருளிச் செய்தார். 1984–ஆம் வருடம், ஸ்ரீ காஞ்சி மகாஸ்சுவாமிகளை பாரதி. வை. ராமச்சந்திரன் தரிசித்தபொழுது, வடமொழியில் உள்ள தோடகாஷ்டகத் தமிழில் மொழிபெயர்த்து பாடச் சொன்னார். அந்த தோகாஷ்டகத்தின் தமிழாக்கம் வருமாறு :–

சங்கர குருவே சரணம்.... சரணம்
உயரிய சாஸ்திர அமுதக் கடலே!
உபநிடதம் கூறும் உண்மைப் பொருளே!
சங்கர குருவே சரணம். சரணம்!

கருணை வடிவே! கடல்போல் வாழ்வில்
கவலைகள் தீர்த்தே காத்திட வேண்டும்!
காவியம், சாஸ்திரம் உணர்த்திட வேண்டும்
சங்கர குருவே சரணம். சரணம்!

உம்முடைய பிறப்பால் உலகம் உய்ந்தது,
உண்மை, ஞானம் உணர்த்திட வைத்தது!
ஒள்ளிய ஆத்தும அறிவினை அருள்வாய்
சங்கர குருவே சரணம். சரணம்!

மங்களம் தந்திடும் சங்கரர் நாமம்
மனதில் மகிழ்வினை உடனே தந்திடும்!
மாளா ஆசைகள் நீக்கிடச் செய்வாய்
சங்கர குருவே சரணம். சரணம்!

நற்செயல் பற்பல செய்திட அருள்வாய்
நல்லவர் பார்வை ஒன்றிடச் செய்வாய்!
நாடிடும் இந்த எளியனைக் காப்பாய்
சங்கர குருவே சரணம். சரணம்!

உலகைக் காத்திடும் உத்தமர்கள் பலர்
உலகின் நன்மையை வேண்டியே நிற்பர்!
ஒளிர்ந்திடும் கதிரவன் ஒளியைப் போலாம்
சங்கர குருவே சரணம். சரணம்!

தவமுனி பலரினும் மேலாம் குருவே
தரணியில் உனைப்போல் ஞானியும் உண்டோ?
தாளினைப் பணிபவர் தாபங்கள் தீர்ப்பாய்
சங்கர குருவே சரணம். சரணம்!

கலைகள் எவையும் யான் அறியேனே!
குருவினை வணங்கும் வகை தெரியேனே!
கடிதென வந்தே காத்திட வேண்டும்
சங்கர குருவே சரணம். சரணம்!

# தீபாவளித் திருநாளில்
## உதவிப் பொருட்கள் அன்பளிப்பு

ஆதிசங்கரர் திருமடத்தின் ஸ்தாபகர் சுவாமி மகேந்தரா ஏற்பாட்டில் ஆண்டுதோறும் சுமார் 150 பேருக்கு தீபாவளி அன்பளிப்பாக உதவிப் பொருட்கள் வழங்கப்பட்டு வருகின்றன. வசதி குறைந்த மக்களுக்கு ஆதிசங்கரர் திருமடம் இதுபோன்ற உதவிகளை செய்து வருகிறது.

ஆதிசங்கரர் திருமடத்தில் ஆண்டுதோறும் சங்கர ஜெயந்தி மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. ஹோமங்கள் செய்து வருகிற பக்தர்களுக்கு அன்னதானமும் வழங்கப்படுகிறது.

ஆண்டுக்கு இருமுறை சமயப் பயிற்சி வகுப்புகள் இருபாலருக்கும் தனித்தனியாக நடத்தப்படுகிறது. சுகாதாரம், கலை, கலாச்சாரம், பண்பாடு போன்ற விஷயங்களை சமயப் பயிற்சி வகுப்புகளின்போது மாணவர்களுக்கு கற்பிக்கப்படுகிறது.

தான் கற்றுணர்ந்த விஷயங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்கிற உயர்ந்த நோக்கில் மலேசிய திருநாடு முழுவதும் சுவாமி ஸ்ரீ மகேந்தரா அவர்கள் பக்திச் சொற்பொழிவுகளை நிகழ்த்தி வருகிறார்.

சுவாமி மகேந்தரா அவர்கள் இந்தியாவிற்கு வரும்பொழுதெல்லாம் புண்ணியத் தீர்த்தங்களில் நீராடி, திருக்கோவில்களுக்கு விஜயம் செய்து, ஆதிசங்கரர் ஸ்தாபித்த திருமடங்களுக்கும் விஜயம் செய்வதை வாடிக்கையாக கொண்டிருக்கிறார்கள். இவருடைய இறைபணியும் சமூகப் பணியும் பாராட்டக் கூடிய ஒன்றாகும்.

பி.டி.டி.ராஜன்
*நிர்வாக அறங்காவலர்*
தேஜஸ் பவுண்டேஷன்
சென்னை – 600061.

